கவிஞர் ராசீரா

# கனவுக் காவியம்



கவிஞர் ராசீரா

சுந்தர் பதிப்பகம்

2,29வது தெரு தில்லைகங்கா நகர்

சென்னை-600061

# கனவுக் காவியம்

BIBILIOGRAPHY

YEAR 2020



AUTHOR : KAVIGNAR RAASEERA

(R.SRINIVASA RAGHAVAN)

TYPE : POEM

PAGES : 80

PUBLISHER : SUNDHAR PATHIPPAGAM
2,29TH STREET
THILLAIGANGANAGAR
CHENNAI– 600061

Authors e-mail- sri.raghavan@gmail.com

Printers : Real Impact Solutions
12,East Abhiramapuram 3rd st
Mylapore

Price : Rs. 100

# சமர்ப்பணம்



புவிசுழன்றா நான்வளர்ந்தேன்?
இல்லையில்லை என்தாய்
தவச்சுழற்றில் தான்வளர்ந்தேன்!

# முன்னுரை

இத்தொகுப்பில் உள்ள கவிதைகள் கவிஞர் ரா சீ ரா பல்வேறு காலகட்டங்களில் எழுதியவை. சந்தவசந்தக் குழுமத்தின் கவியரங்குகளில் கலந்து கொண்டு எழுதியவை சில. அந்தக்காலகட்டத்தில் ஏதாவது சவாலான கவிதை அமைப்பைக் கொடுத்தால் தானும் அதைப்போல எழுதவேண்டும் என முனைவான். அப்படி அவன் எழுதியவற்றில் ஒன்று

ஒரே கவிதை வெண்பாகவும் விருத்தமாகவும் அமையும் அமைப்பு. . அந்தக்கவிதை இதோ:

<u>வெண்பா - விருத்தம்</u>

உன்னருள் தான்வேண்டி, உண்மையும், நற்பேச்சும்,
தன்னலம் இன்றிநல்கும் தன்மையும் - தன்னுள்ளே
சின்னமாய்க் காய்ச்சிடவே, செந்நகர்வாழ்
மைந்தனுன்னை
இன்னிசைப்பண் ஏற்றுவன்தாள் ஈர்த்து

அறுசீர் விருத்தம்

உன்ன ருள்தான் வேண்டி, உண்மை யும்,நற் பேச்சும்
தன்ன லமின்றி நல்கும் தன்மை யும்தன் னுள்ளே
சின்ன மாய்க்காய்ச் சிடவே செந்ந கர்வாழ் மைந்தன்
உன்னை இன்னி சைப்பண் ஏற்று வன்தாள் ஈர்த்து

கட்டளைக் கலித்துறை 4 அடிகளில் அமைவது வழக்கம். இலக்கியத்தில் 7 அடிக்கட்டளைக் கலித்துறை ஒன்று கிடைத்தது. அதைப்போல எழுதுங்கள் என்று சந்தவசந்தத்தில் கேட்ட பொழுது அவன் எழுதிய கவிதை இது.

ஏழடிக் கட்டளை

சூடிப் பலமுறை சுற்றியே வந்தயிச் சுந்தரனும்
வாடி வதைபட்டு வந்ததன் நோக்கமும் மாயையினால்
மூடி மறைபட முன்னவன் நின்னருள் மோதலினால்

## கவிஞர் ராசீரா

தேடித் திரிவதைச் சிந்தையிற் கொண்டுநான் சீலர்களை
நாடி வழிபட நல்லதோர் செவ்வழி ஞானத்தினால்
பாடிக் குருபதம் பற்றிட வந்திங்கு பாலித்தவே
கோடி கொடுப்பினும் கூடிடாத் தந்திரக் கோட்டைகளே!

இந்நாளில் வண்ண ஒத்தாழிசைக் கலிப்பா,
மயங்கிசைyஒத்தாழிசைக்கலிப்பா போன்றவை மிக
அரிதாகவே எழுதப்படுகின்றன. இதை அவனிடம்
சொன்ன போது அவை இரண்டிலும் மிக அருமையான
கவிதை எழுதினான்.

தன் தாயிடம் கொண்டிருந்த அபரிமிதமான அன்பினால்
அவன் எழுதியதுதான்

கனவுக்காவியம் என்னும் கவிதை. அதுதான் இந்த
நூலின் தலைப்பாகவும் அமைகிறது. அந்தக் கவிதையின்
இறுதிப் பாட்டில் அவன் தன் தாயைக் கேட்பது
படிப்போரின் நெஞ்சை நெகிழ வைப்பது. அவன் தாய்
உயிருடன் இருந்த காலத்தில் அவள் இதைப்படித்து
நெகிழ்ந்ததுண்டு.

இதோ அந்தப்பாடல்

என்றோ ஈசன் அழைக்கையிலே
ஈன்ற தெய்வம் உன்றனையே
கன்று நானும் நாடிடுவேன்
கடைசிக் கேள்வி கேட்டிடுவேன்
அன்றைக் கென்னைச் சுமந்ததுபோல்
அடுத்த சன்மம் நமக்கிருந்தால்,
என்னைத் திரும்பச் சுமப்பாயோ?
இன்பம் அதிலே காண்பாயோ?

உன்றன் கனவுக் காவியத்தின்
உயிராய் நானும் வாழ்ந்தேனோ?

அவன் தாய் மறைந்த பொழுது இதே விருத்தத்தைச்
சற்றே மாற்றி எழுதினான்.

இன்றைக் கீசன் அழைத்துவிட்டான்
ஈன்ற தெய்வம் நீ சென்றாய்
கன்று நானும் மிகக்கலங்கிக்
கடைசிக் கேள்வி கேட்கின்றேன்
அன்றைக் கென்னைச் சுமந்ததுபோல்
அடுத்த சன்மம் நமக்கிருந்தால்,

## கனவுக் காவியம்

என்னைத் திரும்பச் சுமப்பாயோ?
இன்பம் அதிலே காண்பாயோ?

மந்திரமாவது நீறு என்னும் சம்பந்தர் பாடல் ஏற்படுத்திய தாக்கத்தால் அவன் எழுதிய கவிதையில் ஒரு விருத்தம்

ஈன்று பிறந்தில னீசன்
இடும்பை யிடிப்பவ னீசன்
ஆன்றவ ராற்றலு மீசன்
அம்மையு மப்பனு மீசன்
ஊன்றா ஊன்றது மீசன்
உண்மையி லுண்மையு மீசன்
ஏன்றெமைக் கொள்பவ னீசன் - ஏற்றில்
ஏறிடு மென்னுறை யீசன்

நாட்டில் நடக்கும் தீமைகள் கவிஞனின் நெஞ்சில் ஆழ்ந்த பாதிப்பை ஏற்படுத்துகின்றதையும் காண்கிறோம். பராசக்தியிடம் பொறுத்தது போதும் பொங்கியெழு எனக்கேட்கிறான்

சாதியை சாமிக்கும் மேலே - வைத்து
தாங்கிடுங் கேடுசெய் வஞ்சர்பின் னாலே
பாதி சனங்களு மோடும் - மிச்சம்
மீதியை வென்றிடத் தான்தயா ராகும்

தத்தரிகிட தத்தரிகிட தித்தோம் - தக
தத்தரிகிட தத்தரிகிட தித்தோம்

கண்திறப் பாயடி சக்தி - களை
காய்ச்சிட நானுரைப் பேனொரு யுக்தி

ஐயோ பொறுத்திடல் போதும் - இனி
அம்மைநின் னாட்டத்தைக் காட்டிட வேண்டும்
ஓஓஓ ஓவென்ற ஓலம் - மாறி
ஓமோமோம் ஓமென்று கேட்கட்டும் ஞாலம்

அவன் ஸ்ரீவித்யா வழிபாட்டில் நுழைந்த பிற்பாடு அவன் கவிதைகளும் அதை ஒட்டியே மாற்றம் கண்டன. அந்த மாற்றத்தைப் பற்றி எனக்குள் எத்தனை மாற்றம் என்ற கவிதை பேசுகிறது

அரைக்கண் மூடி இறைதனை நாடி
கரையறு நதியில் கலந்திட வேண்டி

## கவிஞர் ராசீரா

மறைதனை ஓதிப் பறந்திடும் மனத்தைச்
சிறைதனில் அடைத்து ஒருமைப்படுத்த
……..
என்னைக் கிழித்தே என்னைத் தேடும்
விண்ணைக் கிழிக்கும் ஆற்றல் எனக்கு!
தன்னை அடக்கி இத்தனை காலம்
தனியே உள்ளே யென்னோ இருந்தது?

அம்மா இதுதான் என்றன் தேடல்
சும்மா கிடந்த அக்கினி குஞ்சை
சற்றே நானும் சீண்டிப் பார்க்க
ஆகா எனக்குள் எத்தனை மாற்றம்!

அந்த மாற்றத்தாலே தத்ததுவ சோதனம் நடைபெறுகிறது.
அதன் வெளிப்பாடுதான்

ஒன்றன் உள்ளே ஒன்றைச் சேர்க்க
ஒன்றோ டொன்றும் ஒன்றாய் மாறும்
ஒன்றொன் றையுமே ஒன்றிச் சேர்க்க
ஒன்றே மிஞ்சும்,உண்மை! ஒன்றே! என்கிற உன்னத
ஞானம்

ஸ்ரீவித்யா உபாசனையில் குரு மிக முக்கியமான *இடத்தைப் பெறுகிறார். அவரைச் சுற்றியே எல்லாம் நடக்கின்றன. அதை உணர்த்துகிறது இந்தக் கவிதை.*

***குருவாய் வந்தாய் அருளாய்த் தந்தாய்***

***கருவாய் வந்தாய் மதியுள் சென்றாய்***

***உருவாய் அருவாய் ஒளியாய் ஒன்றாய்***

***கனவாய் இலதாய் நினைவாய் நின்றாய்***

தேடல் தெளிவு, நமச்சிவாய எது என்னும் விளக்கம் , நான் யார் என்னும் ஆய்வு எனப்பல வகையாக விரிகின்றன கவிதைகள். இத்தொகுதியில் வெண்பா விருத்தம் ,கட்டளைக் கலித்துறை, அகவல் , சிந்து, காவடிச் சிந்து, கலிப்பா எனப்பலவகையான பாக்களையும் பாவினங்களையும் காண முடிகிறது

கவிஞர் ராசீரா இசைஞானம் உள்ளவனாக இருப்பதால், பல கீர்த்தனைகளும் எழுதியிருக்கிறான். அவற்றில் சில வழக்கமான துதிப்பாடல்களாக அமையாமல் புதுமையாக அமைந்திருப்பது சிறப்பு. மொத்தத்தில் பலவகையான



சிந்தனைகளையும் சுவைகளையும் கொண்ட கவிதைக் களஞ்சியம் இந்நூல்.. இந்நூலை அழகிய முறையில் அச்சிட்டளித்த ரியல் இம்பேக்ட் சொல்யூஷன்ஸ் அச்சகத்தாருக்கு என் நன்றி

இலந்தை சு இராமசாமி

கவிஞர் ராசீரா

## பொருளடக்கம்

கனவுக் காவியம்

# ஈன்று பிறந்தில னீசன்

ஈன்று பிறந்தில னீசன்
இடும்பை யிடிப்பவ னீசன்
ஆன்றவ ராற்றலு மீசன்
அம்மையு மப்பனு மீசன்
ஊன்றா ஊன்றது மீசன்
உண்மையி லுண்மையு மீசன்
ஏன்றெமைக் கொள்பவ னீசன் - ஏற்றில்
ஏறிடு மென்னுறை யீசன்

கங்கைகொள் காரக னீசன்
காற்றிடை காதமு மீசன்
சங்கினுள் சங்கம மீசன்
சால்புடைச் சைவமு மீசன்
பங்கிடும் பரமனு மீசன்
பார்த்தனின் பசுபத மீசன்
தேங்கணை திண்ணமு மீசன் - திங்கள்
தீர்த்தமு மென்னுறை யீசன்

கடவுளர்க் கந்தழி ஈசன்
காமனைக் கொன்றவ னீசன்
சடத்தினுள் சீவனு மீசன்
சாமவே தத்துளன் னீசன்
நடமிடும் நாயக னீசன்
நம்பினார் நிட்டையு ளீசன்
சுடலையுற் சாம்பலு மீசன் - சுடு
சொல்லிலு மென்னுறை யீசன்

அட்டமா சித்தியு மீசன்
ஆண்டகை யாண்டியு மீசன்
எட்டவுங் கிட்டவு மீசன்
ஏட்டிலே ஏறில னீசன்
சட்டியு மேந்திடு மீசன்
சாத்திர சாரமு மீசன்
பிட்டுக்கு ழைத்தவ னீசன் - பெரும்
பீடமா யென்னுறை யீசன்

சுந்தர மானவ னீசன்
சூக்கும மானவ னீசன்
சந்திர சேகர னீசன்
சாந்தசொ ரூபனு மீசன்
சிந்தையுற் சோதியு மீசன்
சீரியர்ச் சீலனு மீசன்
செந்தமி ழால்சிறப் பெய்திச் - சிவச்
சேவடி தானடை வோமே!

## புவனேச்வரி

பக்தியுடன் சக்தியுனைப் பாடிப் பணிந்தால்
முக்திதரும் சித்திகளும் முன்வந்து நிற்கும்
சுற்றிவரும் கர்மபயன் தூக்கத்தில் மாய
பொக்கிஷமே! காத்தருள்வாய் புவனேச் வரியே!

# சிற்றம்பலச் சிந்து

கருணைக் கனக சபேசன்- அவன்
காலடி நாடிடும் நேசன் - அந்த
திரிபுரமெரி திருக்கடவுளின் திருவம்பலப் புகழ்பாடிட
வந்தேன் - சிந்த – தந்தேன் 1

ரகசியம் போதிக்கும் ஊராம்
நடராஜன் அவன் திருப்பேராம் - அங்கு
அகயோகமும் அருயாகமும் சிவலோகமும்
பதம்வைத்திடச்
சேரும் - உடன் -வாரும் 2

மலையன் மகள் சிவகாமி - மன்னன்
சேவடி சேர் வழிகாமி - அந்த
அலைமாமகள் கலைமார்புடை திருமாலவன்
அறியாததைத்
தேடி - வந்தோம்- ஓடி 3

பித்தன் சிதம்பர நாதன்- அவன்
சித்தர்க்கும் போதிக்கும் வேதன் - நித்தம்
நடமாடிடும் நடராஜனின் நினைவே நிறை
தவமென்பதை
நாமே - அறி- வோமே 4

தித்திக்கும் காவடிச் சிந்து -தில்லை
அம்பலம் சேரும்வி ருந்து - பாட
வித்திட்டிடும் வினையாவையும் திக்குத்திசை
தெரியாமலே
வாடும் - எழுந் தோடும்
வாடும் - பயந் தோடும்
வாடும் - மறைந் தோடும் 5

# இன்றைக்கும் வேண்டும் இது

## கவியரங்கம்

தொட்டில் தொடங்கி என்கவிதை
சொல்லக் கேட்டு வளர்ந்தமகன்
எட்டி நின்றான் இதுவரையில்
இனிதே கவிதை எழுதுகிறான்
அட்ட சித்தித் தன்மைகளின்
ஆழம் நுழைந்து பார்க்கின்றான்
இட்டம் போல இன்றைக்கே
என்ன தேவை என்பானோ?
**இலந்தை**

## இன்றைக்கும் வேண்டும் இது

குக்கரொலி "சுப்ரபாதம்", கூசவைக்கும் வெண்கதிர்கள்,
பக்கத்தில் தங்கையைத் தட்டியே - கக்கத்தில்,
என்படுக்கை மட்டுமே நான்மடித்துத் தானெழுவேன்!
இன்றைக்கும் வேண்டும் இது. 1

பல்தேய்க்க ஓர்சண்டை, பாத்ரூமோ மேல்படிதான்,
சொல்மேலே சொல்போட்டுச் சூடாகும்! - "வெல்" என்றே
என்னுள்ளே கர்ஜிக்கும் ஈடில்லா என்னகந்தை
இன்றைக்கு வேண்டும் இது. 2

அம்மா அடித்தவுடன் அன்றையநாள் ஆரம்பம்
சும்மா இருந்தாலும் சூடேறும் - சிம்மமாய்
என்தாய் சுழன்றுதான் எம்மைக் கிளப்புவாள்
இன்றைக்கு வேண்டும் இது. 3

புத்தகம் தானெடுத்துப் பையுள் அடுக்கிவைத்து
அத்தனை அன்பாய்த் தலைசீவி - கத்தியே!
என்வாயில் சாதத்தை இட்டிடும் நேர்த்தியே!
இன்றைக்கும் வேண்டும் இது. 4

.பூசை தினமுண்டு, பூப்பறித்து நான்கொடுப்பேன்
ஆசை தெரியும் அளவுடனே! நேசமாய்
என்றும் துதிகளை எங்களுக்குப் போதிப்பாள்
இன்றைக்கும் வேண்டும் இது. 5

கவனிப்பாள் தந்தையையும், கண்ணிமைக்கும் போதில்
கவளம் மடக்கெனக் கொள்வாள் - தவிப்புடன்,
சின்னவர் எங்களுக்குச் சீராடை சூட்டிடுவாள்
இன்றைக்கும் வேண்டும் இது. 6

ஏழுநிமிடம் தான்கணக்கு என்தாய்க்கு ஓர்தினமும்
பாழுங் குழி தாண்டிப் பள்ளிக்கு போகரயில்
முன்பிடிப்பாள்! எங்களையும் முத்தாகப்
போய்ச்சேர்ப்பாள்!
இன்றைக்கும் வேண்டும் இது. 7

மாலையிலும் ஓட்டம்தான்! வம்புக்கோ பஞ்சமில்லை!
காலையில் விட்டதெல்லாம் கண்தெரியும்! -
வேலைக்குச்
சென்றுவந்த தொய்விருந்தும் சிற்றுண்டி தான்செய்வாள்
இன்றைக்கும் வேண்டும் இது. 8

விருந்தில்லா நாளில்லை! வந்தவர் காண்பார்
பெரியகரம், என்றுமே இன்சொல் உரைதருவாள்
என்றும் பலரை எதிர்பார்த்துத் தான்சமைப்பாள்
இன்றைக்கு வேண்டும் இது. 9

தூங்கிடும் போதிலும் சுந்தரத் தொல்கதை
பாங்குடன் எம்முள் பதியவிட்டுத்- தாங்கியே
என்னையும் நீறிட்டு மெத்தையில் போடுவாள்
இன்றைக்கு வேண்டும் இது. 10

இறையுணர்வு, நல்லொழுக்கம், ஈகைகுணம், மேலும்
மறைஞானம், சங்கீதம் வார்த்தாள் - குறையேதும்
என்னிடம் கண்டால், இடித்துரைத்துச் சீர்செய்வாள்
இன்றைக்கு வேண்டும் இது. 11

பாடங்கள் போதிப்பாள், பட்டங்கள் தான்பெற்றாள்
ஓடியுழைத் தேமேல் உயர்த்திட்டாள் - வாடியே
தன்னுடலை, எமைப்பேணிப் தான்சுமந்து காத்திட்டாள்
இன்றைக்கு வேண்டும் இது. 12

## கனவுக் காவியம்

புவிசுழன்றா நான்வளர்ந்தேன்? இல்லையில்லை என்தாய்
தவச்சுழற்றில் தான்வளர்ந்தேன்!- அம்மா, "கவி"யைவிட
என்மேலே பாசம் இணையின்றித் தான்பொழிந்தாள்
இன்றைக்கு வேண்டும் இது. 13

(என் தங்கையின் பெயர் கவிதா. வீட்டில், கவி என்று அழைப்போம்)

இன்றைக்கோ எல்லாம் எனக்கிருந்தும் உள்நெஞ்சில்
இன்றைக்கும் ஏக்கம் எனக்குண்டே - அன்றுபோல்
இன்றைக்கும் ஓர்நாள் சிறுபருவச் சீர்வாழ்க்கை
இன்றைக்கு வேண்டும் இது. 14



கவிஞர் ராசீரா

# வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா

தரவு

படைத்தவள்நீ, அண்டங்கள் யாவையும் படைத்தவள்நீ
விடையவள்நீ, கேள்விகள் யாவைக்கும் விடையவள்நீ
நின்றவள்நீ, புலவர்தம் கருவாக நின்றவள்நீ
வென்றவள்நீ, சும்பநி சும்பனை வென்றவள்நீ

தாழிசை

பாவர்கள் எம்மையும் பாவலராய் ஆக்க,
தாவியே வருவாய் தரணியின் மேலே,
நாவினில் புரிகநீ நடனம் நாயகீ!! (1)

கையிலே வீணையொடு கமண்டலம் மாலை
தையலே இருக்கிறாய் தாமரை மேலே
மையல்நான் கொள்கிறேன் வந்திடு நீயே! (2)

கலைகலெ லாமுனது காலடியில் தஞ்சம்
கல்வியெலாம் உன்றன் கரங்களில் கொஞ்சும்
அலைகிற வாழ்க்கையில் யாவுமே தருவாய்
அல்லலெலாம் போக்கி ஆதரிக்க வருவாய்

(அராகம்

பிரமனின் துணையொடு தரணியைப் படைத்திடும்
திருமகள் வழிபடும் செயலதன் நாயகி!
கருவிலே கவிதையைக் காட்டிடும் கலைமதி
திருவடி தொழுதிடத் தேடினேன் பாரதி!

அம்போதரங்கம்

"கல்விப் பொருள்தரு கருணைக் கடவுள்நீ
மல்கும் மதியாய் மலர்மேல் இருக்கிறாய் (1)

சித்தி தரவிழைந்து சீக்கிரம் வருகநீ
புத்திச் செருக்கினைப் பூண்டோ டழிக்கநீ (2)
(இவை பேரெண்)

ப

# கனவுக் காவியம்

புலவர் உரையில் புழங்கிடும் பாவையே (1)
கலியில் விழிகொள் கலைமகள் வாணியே (2)
கானமொடு இசையாய்க் கவியில் திகழ்கிறாய் (3)
செகத்தைப் படைப்பவன் சிந்தையில் உறைகிறாய் (4)
(இவை அளவெண்)"
வளர்மதி போன்றதுன் முகம். (1)
எழுதுகோல் போன்றதுன் நா. (2)
குமுதம் போன்றதுன் வாய். (3)
முல்லையைப் போன்றதுன் பல். (4)
அம்புகள் போன்றவை கண்கள். (5)
காந்தம் போன்றதுன் பார்வை. (6)
சுந்தரச் சிலையதுன் தேகம். (7)
செந்தமிழ் உனதுதாய் மொழியே! (8)
(இவை இடையெண்)

வித்தை நீ; வீரம் நீ; (1-2)
விஜயம் நீ; விஸ்வம் நீ; (3-4)
வாக்கு நீ; வாணீ நீ; (5-6)
தயையும் நீ; தாயும் நீ; (7-8)
தருணம் நீ; தவமும் நீ; (9-10)
பிராஹ்மி நீ; பரதம் நீ; (11-12)
ஜனனம் நீ; ஜதியும் நீ; (13-14)
சந்தம் நீ; சகலம் நீ; (15-16)
(இவை சிற்றெண்)

தனிச்சொல்

எனவாங்கு

சுரிதகம்

செப்பும் திறனும், சிந்தனை அரணும்,
ஒப்பில் இசையும், ஓவியக் கலையும்
எப்பொ ழுதுமே என்னிடம் இருக்க
சப்தஸ் வரமே! சாரதே! அருளே!

ராசீரா - 1 அக்டோபர் 2006

## குறளடி வஞ்சிப்பா

வெண்தாமரை மலர்மேவிடும்
சிந்தாமணிச் சிலைபோன்றனை,
எந்நாளுமே எமைத்தாங்கிட
அன்னத்திலே அமர்ந்தேவரும்

எழிலே

சொல்லத் தவித்தேன் சுந்தரன்
சொல்லும் திறனை நீதரு வாயே



# கனவுக் காவியம்

என்னைக் கருவில் சுமக்கையிலே,
என்ன வெல்லாம் நினைத்தாயோ?
என்றன் நிறத்தை, வடிவத்தை,
எண்ணிப் பார்த்து மகிழ்ந்தாயோ?
உன்னை உள்ளே உதைக்கையிலே
உறங்கும் போதும் சுவைத்தாயோ?
உன்றன் கனவுக் காவியத்தின்
உயிராய் நானும் வாழ்ந்தேனோ?

உன்றன் உணவை எனக்கூட்டி
உற்ற துயரை மறந்தாயோ?
என்னைச் சுமந்த போதினிலே
எல்லாச் சுவையும் தலைகீழாய்
என்னே ஆச்சு? வியந்தாயோ?
என்னைத் துளியும் கடிந்தாயோ?
உன்றன் கனவுக் காவியத்தின்
உயிராய் நானும் வாழ்ந்தேனோ?

உன்றன் உடலில் ஓர்பங்காய்
உயிர்த்து நானும் இருக்கையிலே
என்றன் மனமென்(று) ஒன்றுண்டா?
இல்லை அதுவும் பங்கீடா?
உன்றன் மனத்தின் ஆசைகளை
உள்ளே ஊட்டி வளர்த்தாயோ?
உன்றன் கனவுக் காவியத்தின்
உயிராய் நானும் வாழ்ந்தேனோ?

ஒன்றா? இரண்டா? ஈரைந்து!
ஒன்றாய்த் தவமும் புரிந்தோமோ?
சின்னச் சின்னக் கனவுபல
சேர்ந்தே நாமும் கண்டோமோ?
இன்சீ னியரா? மருத்துவரா?
எதுவாய் என்னை வரைந்திட்டாய்?
உன்றன் கனவுக் காவியத்தின்
உயிராய் நானும் வாழ்ந்தேனோ?

# கவிஞர் ராசீரா

குன்றாய்க் குணத்தில் திகழ்வானே
கூடி வாழ்ந்து மகிழ்வானே
வென்றே சகத்தை வருவானே
வேண்டு பவர்க்கே அருள்வானே
என்றே கனவு பலகோடி
என்னைப் பற்றிக் கண்டாயோ
உன்றன் கனவுக் காவியத்தின்
உயிராய் நானும் வாழ்ந்தேனோ?

என்ன வெல்லாம் செய்தேனோ
ஏனோ எனக்கு நினைவில்லை!
உன்றன் மனத்தை என்றேனும்
ஊறு தந்து நடந்தேனோ?
இன்பம் ஏதும் தந்தேனோ
இல்லை வாட்டம் தந்தேனோ?
உன்றன் கனவுக் காவியத்தின்
உயிராய் நானும் வாழ்ந்தேனோ?

உன்ற னுக்கே நான்முகனும்
உருவாக் குகிற வித்தைதரின்
என்னை எதுவாய் எவ்வாறாய்?
இல்லை இதுபோல் இவ்வாறாய்?
உன்னை கேட்க நினைக்கின்றேன்
ஒளிக்கா தேநீ விடைதருவாய்
உன்றன் கனவுக் காவியத்தின்
உயிராய் நானும் வாழ்ந்தேனோ?

என்றோ ஈசன் அழைக்கையிலே
ஈன்ற தெய்வம் உன்றனையே
கன்று நானும் நாடிடுவேன்
கடைசிக் கேள்வி கேட்டிடுவேன்
அன்றைக் கென்னைச் சுமந்ததுபோல்
அடுத்த சன்மம் நமக்கிருந்தால்,
என்னைத் திரும்பச் சுமப்பாயோ?
இன்பம் அதிலே காண்பாயோ?

உன்றன் கனவுக் காவியத்தின்
உயிராய் நானும் வாழ்ந்தேனோ? ராசீரா 22-9-2006

# கண்திறப்பாயடி சக்தி

கண்திறப் பாயடி சக்தி - களை
காய்ச்சிட நானுரைப் பேனொரு யுக்தி

தத்தரிகிட தத்தரிகிட தித்தோம் - தக
தத்தரிகிட தத்தரிகிட தித்தோம்

கத்தியின் மேல்நடக் கின்றார் - சிவ
சித்தியை கொண்டவர் போல்நடிக் கின்றார்
பித்தனைப் போல்தொடர் கின்றார் - பின்னே
பெண்ணையும் பொன்னையுங் கெட்டழிக் கின்றார்

கண்திறப் பாயடி சக்தி - களை
காய்ச்சிட நானுரைப் பேனொரு யுக்தி

ஆண்டி யிடமிரக் கின்றார் - தானே
ஆட்சியை வென்றது போலுரைக் கின்றார்
சீண்டியுங் கல்லினை மாந்தர் - சுய
சிந்தனை யின்றியே கால்தொழு கின்றார்

தத்தரிகிட தத்தரிகிட தித்தோம் - தக
தத்தரிகிட தத்தரிகிட தித்தோம்

சாதியை சாமிக்கும் மேலே - வைத்து
தாங்கிடுங் கேடுசெய் வஞ்சர்பின் னாலே
பாதி சனங்களு மோடும் - மிச்சம்
மீதியை வென்றிடத் தான்தயா ராகும்

தத்தரிகிட தத்தரிகிட தித்தோம் - தக
தத்தரிகிட தத்தரிகிட தித்தோம்

கண்திறப் பாயடி சக்தி - களை
காய்ச்சிட நானுரைப் பேனொரு யுக்தி

ஐயோ பொறுத்திடல் போதும் - இனி
அம்மைநின் னாட்டத்தைக் காட்டிட வேண்டும்
ஓஓஓ ஓவென்ற ஓலம் - மாறி
ஓமோமோம் ஓமென்று கேட்கட்டுஞ் ஞாலம்

## கவிஞர் ராசீரா

கண்திறப் பாயடி சக்தி - களை
காய்ச்சிட நானுரைப் பேனொரு யுக்தி

படிபடி யென்பரி ணாமம் - கெட்டுப்
பட்டது விட்டது, ஓ-பரி தாபம்
முடிமதி வீழ்ந்திட வோடி - புவி
முழுதும் சரிசெய நீயிங்கு வாடி

தத்தரிகிட தத்தரிகிட தித்தோம் - தக
தத்தரிகிட தத்தரிகிட தித்தோம்

மானம், மனசாட்சி, வீரம் - எம்முள்
மாற்றிய மைத்திடு பன்மடங் கேற்றம்
வானமி ணைமதி வேகம் - மன
மையத் துள்வைத்தருள் ஓமெனும் யோகம்

கண்திறப் பாயடி சக்தி - களை
காய்ச்சிட நானுரைப் பேனொரு யுக்தி

வாழட்டும் நல்லதோர் நட்பு - தொலைந்
தோடட்டும் தீங்குசெய் எண்ணமாம் தப்பு
வீழட்டும் வீணர்கள் வாழ்க்கை - சதி
வென்றிட சிந்தையுள் ளோர்பொறி சேர்க்கை

கண்திறப் பாயடி சக்தி - களை
காய்ச்சிட நானுரைப் பேனொரு யுக்தி

வல்லவர் எங்குங்சி றக்க - எம்முள்
மாயட்டும் சோம்பலும் வீண்பழி பேச்சும்
நல்லவர் நெஞ்சங் குழைந்தால் - உடன்
நாசமே செய்திடு செய்தவர் தம்மை

தத்தரிகிட தத்தரிகிட தித்தோம் - தக
தத்தரிகிட தத்தரிகிட தித்தோம்
தத்தரிகிட தத்தரிகிட தித்தோம் - தக
தத்தரிகிட தத்தரிகிட தித்தோம்

கண்திறந் தாயடி சக்தி - எங்கும்
காண்கிற சுந்தர ஞாலமே முக்தி
மண்ணுக் கிணையான சக்தி - தமிழ்
வஞ்சிக் கியலாத தென்றொன் றுமுண்டோ!!

# எனக்குள் எத்தனை மாற்றம்?

கண்ணைக் கவரும் காலைப் பொழுதில்
என்னைக் கவர்ந்த இடத்தில் அமர்ந்து
மண்ணைக் காக்கும் மாசறு மாதவன்
தன்னைச் சேரும் தாகம் தணிக்க

அரைக்கண் மூடி இறைதனை நாடி
கரையறு நதியில் கலந்திட வேண்டி
மறைதனை ஓதிப் பறந்திடும் மனத்தைச்
சிறைதனில் அடைத்து ஒருமைப்படுத்த

ஓவியம் கிழித்து வர்ணம் தெளிக்கும்
காவியத் தலைவன் செயலிது தானோ?
தாவிடும் வர்ணச் சுழல் தனைத் தாண்டிச்
சேவித்து வணங்கச் சேவடி தேடி

பண்ணைக் கிழித்துப் பாட்டைப் பொழியும்
மண்ணைக் காக்கும் மாதவன் செயலோ?
என்னை மயக்க ஈர்க்கும் பண்ணால்
தன்னை மறைத்தல் நியாயம் தானோ?

என்னைக் கிழித்தே என்னைத் தேடும்
விண்ணைக் கிழிக்கும் ஆற்றல் எனக்கு!
தன்னை அடக்கி இத்தனை காலம்
தனியே உள்ளே யென்னோ இருந்தது?

அம்மா இதுதான் என்றன் தேடல்
சும்மா கிடந்த அக்கினி குஞ்சை
சற்றே நானும் சீண்டிப் பார்க்க
ஆகா எனக்குள் எத்தனை மாற்றம்!

கடகட லம்லம் வம்சம் ஷம்சம்
உடலை உலுக்கும் உயிரின் ஓட்டம்
சடசட வம்வம் சீற்றம் கொண்டு
அடடா ரம்ரம் அக்கினித் துள்ளல்

இதய ஊற்றம் யம்யம் வாயு
பதமாய் வேகம் விவேக மாகும்

## கவிஞர் ராசீரா

கததக நடனம் ஹம்ஹம் தகதிமி
இதுதான் பிரமம் இருகண் மத்தியில்।

ஓடும் ஆடும் தகதிமி தகதக
கூடு கிடக்க சிவசக்தி கூடல்
கூடும் நர்த்தனம் ப்ரம்மனந்தரம்
ஓகோ அற்புதம் இம்மைக்கப்புறம்

அன்பே நிரந்தரம் அன்பே சுதந்திரம்
அதுதான் என்பதம் என்றே இருக்கையில்
அன்பை என்கை எதுவோ தீண்டிட
அழகன் என்மகன் ஈர்த்தான் இப்பரமே!



# கயிலை கலிப்பா (வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா)

தரவு

திருமுடியில் நடமிடுநல் கருமைநிற நாகமது,
செருக்குடனே பவனிவரும் திரிமதியின் மடியினிலே,
கண்ணுறங்கி, களைப்பாறி, களித்திருக்கும் பொழுதினிலே
விண்மகளும் நீரதன்மேல், விளையாட்டாய் விட்டனளே

தாழிசை

கணபதியும் குமரனுடன் களியாட்டம் போட,
கணவனுடன் உமையம்மை களிப்புடனே கண்டாள்.

பிரமனுடன் திருமாலும் பரம்பொருளைத் தேடி,
பிரதோசத் திருநடனம் தரிசிக்க வந்தார்

நந்தியுடன் கனங்களுமே நடனங்கள் ஆட,
விந்தையென நடராஜன் விசையாட்டம் போட்டான்.

அராகம்

திரிமதி நழுவிட திரிபுர மெரித்தவன்,
திருமகள், கலைமகள், திருவெழில் ரசித்திட
அருவியின் ஜதியென அரும்பதம் அருளிட
திரிகிட திமிதிமி தெறித்தன சிலம்பொலி
தனதன தனதன தாளம் முழங்கிட
பனபன பனபன பம்பொலி பரவிட
உடுவிடு விடுவென உடுக்கை உருமிட
கிடுகிடு கிடுவென காளி யுடனவன்
அடிமுடி எதுவென அவரவர் வினவிட
சடசட சடவென கங்கை குதித்திட
வியர்வையின் துளிகளும் விண்மீன் ஆயின
கால்துளி தூசுகள் காலங்கள் ஆயின
அணுவிடை அணுவிலும் அண்டங் களாடின
கணத்திடை கணத்திலும் பிரளயம் ஓடின
உரசிய பொறிகளில் ரவிபல தோன்றின
அரஅர சிவசிவ அனைவரும் முழங்கிட

## கவிஞர் ராசீரா

மனிதரும் முனிவரும் மறைகளை ஓதிட
சிவனவன் அரும்பெருந் தாண்டவம் மாடினான்.

அம்போதரங்கம்

திருக்கயிலை மலைவாழும் செருக்கறுக்கும் ஈசன்,
விரும்பி,அவன் அடிசேர வீடுகொள்வான் போற்றி!(1)

அகிலங்கள் சுகம்பெறவே ஆலகாலம் கொண்ட
பிரதோஷத் தலைவனவன் பொற்பாதம் போற்றி! (2)

(இவை பேரெண்)
எருதினிலே பவனிவரும் ஈசனடி போற்றி! (1)
கருவினிலும் கருத்திருக்கும் குருகடவுள் போற்றி!(2)
கருவத்தை அறுத்தெறியும் திரிசூலன் போற்றி! (3)
பரகதிக்கு அழைப்புவிடும் பரமசிவன் போற்றி! (4)

(இவை அளவெண்)
சிந்தையுள்ளே சுடருமவன் சிவன்தான்! (1)
செபத்தினிலும் சுகப்பொருளே சிவன்தான்! (2)
முந்திடும்நல் முதல்வனவன் சிவன்தான்! (3)
முழுமுதலாம் கடவுளவன் சிவன்தான்! (4)
சக்தியுடன் சேர்ந்தவனும் சிவன்தான்! (5)
சமநிலையில் எரிமலையும் சிவன்தான்! (6)
பக்தர்களுக் கடியவனும் சிவன்தான்! (7)
பரமநிலை தருபவனும் சிவன்தான்! (8)

(இவை இடையெண்)
சுந்தரமா னவனீசன்! 1
சுடர்மிகுசோ தியுமீசன்! 2
சந்திரசே கரனீசன்! 3
சவத்தினுள்சி வமயமீசன்! 4
சிந்தையுற்சோ தியுமீசன்! 5
சினத்திலும்கு ணமவனீசன் 6
செந்தமிழ்தெய் வமுமீசன்! 7
சிறியதும்பெ ரியதுமீசன்! 8
எமனையுங்கொன் றவனீசன்! 9
எருதிலேவ ருபவனீசன்! 10
சமத்துவசிந் தையுமீசன்! 11
தவமதிந்த வப்பொருளீசன்! 12

## கனவுக் காவியம்



(இவை சிற்றெண்)
தனிச்சொல்
எனவாங்கு
சுரிதகம்

அத்தனின் ஆட்டமும் ஆற்றலும் செப்பிடும்
சித்திரக் கலியிதை சிறப்புடன் பாடிட,
அத்தனை இன்பமும் அள்ளியே தந்திடும்
சத்தியம்! சேருவார் சங்கரன் பாதமே!



# பாலகாண்ட வெண்பா

தேன்சுவைத் தீந்தமிழில் தித்திக்கும் சீர்வெண்பா
நான்பாட வாவென்றன் நா

நாவன்மை நாள்தோறும் நன்றாக நான்பெறவே
நீவருடு என்நாவில் நேர்

## பால காண்டம்

சரயு நதிக்கரையில் தானோங்கி நிற்கும்
தருமம் அயோத்தியே தான்!

விண்போற்றும் மாவேந்தன் வீரன் தசரதனும்
கண்ணாட்சி செய்வதைக் காண்

காண்மிகு தேவியர் கௌசலை கைகேயி
சேண்சேர் சுமித்திரை தேர்

நேரிசை வெண்பா

இன்ப வெளிப்பாட்டில் ஈன்ற உயிர்நாற்றே
அன்புப் பெருக்கெடுத்து ஆட்கொள்ளும் - என்னுடைய
காதல் களிப்பின் கருவம்சேர் அத்தாட்சி
வேதமெய் ஞானத்தின் மேல்

## நான் யார்

எந்தக் கேள்வி யெல்லோ ருள்ளும்
ஒருமுறை யேனும் கேட்டிடுமோ
எந்தக் கேள்வி யெழுந்தால் தூக்கம்
ஒருமுறை யேனும் கெட்டிடுமோ
அந்தக் கேள்வி அன்றென் மனத்தின்
நாற்றை சற்றே ஆட்டியதும்
அந்தக் கேள்வி ஆற்றல் என்னை
ஐயோ! அன்றே வென்றதுவே!

அம்மை யப்பன் அன்புச் சேர்க்கை
அடையா ளங்கள் தானோ நான்?
இம்மை மும்மை கர்மப் பலன்கள்
ஈன்ற குழவி தானோநான்?
சும்மா எங்கோ கிடந்த உடலைச்
சூடும் உயிருந் தானோநான்?
இம்மண் காற்று தீ, ஆ காயம்
ஈரக் கலவை தானோநான்?

மின்னல் விழைவில் பல்லா யிரமாய்
எண்ணும் மனமே தானோநான்?
அன்பு, காமம், ஆசை , கோபம்,
அலட்சி யங்கள் தானோநான்?
சின்னக் குறிப்பில் செகத்தை வெல்லும்
சீர்கொள் அறிவே தானோநான்?
பின்னும் எழுபதி னாயிரம் நாடியுள்
பிராணச் சூக்குமந் தானோநான்?

கல்லாய், புல்லாய், மரமாய், புழுவாய்,
கடலுள் மீனாய் பலசன்மம்
புள்ளாய், பாம்பாய், பால்தரு பசுவாய்,
போரிடும் விலங்காய் பலசன்மம்
நல்லோர் மனித உடலையும் பலமுறை
நாடியு டுத்திக் கொண்டிங்கே
எல்லாப் பிறப்பின் வாழ்க்கை சாட்சி
ஏற்றும் காலம் தானோநான்??

தத்தித் தாவி வந்த நாள்முதல்

## கவிஞர் ராசீரா

தடவிச் செல்லும் நாள்வரையில்
எத்தனை எத்தனை அதிசய அனுபவம்
ஏற்றமி றக்கம், கிறக்கங்கள்
சத்தம், பித்தம், சூழ்ச்சி, சுதந்திரம்
சாதனை, வெற்றி, வேதனைகள்
அத்தனை யுணர்வுடன் பதித்தே நிகழ்வுறும்
ஞாபகக் கோர்வை தானோநான்??

நதியின் ஓட்ட மியற்கை யியக்கம்
உதிர வோட்டம் யாரியக்கம்?
விதியின் ஓட்ட மியற்கை யியக்கம்
மதியி னோட்டம் யாரியக்கம்?
ஜதிசங் கீத மியற்கை யியக்கம்
இதயத் துடிப்பும் யாரியக்கம்?
இதிலே தோன்றும் ஒற்றுமை நோக்கின்,
புதிரே! இயற்கை நான்தானோ?

கேட்கு மொலியுங் காணு மொளியும்
பேசு மொழியும் நான்தானோ?
ஏட்டுக் கல்வியி லாழ்ந்த கருத்தோ
டெண்ணப் பொலிவும் நான்தானோ?
பாட்டு, பரதம், ஓவியங் கவிதை,
பற்பல கலைகளும் நான்தானோ?
காட்சியு னானோ? காண்பவ னானோ?
கடவுளே! செகமே நான்தானோ?

அத்தன் நானே மகனும் நானே
ஆக்கமு மாக்குவ நானேதான்
பத்தனு நானே பக்தியும் நானே
பந்தமும் பந்துவும் நானேதான்
நித்திரை நானே விழிப்பும் நானே
நிறைவுங் குறைவும் நானேதான்
சத்துரு நானே மித்துரு நானே
சத்தியம்! சர்வமும் நானேதான்!

பெயரும் வினையும் உயிரும் உடலும்
பிணைத்திடு மனமும் உணர்வோடு
உயர்மிகு மறிவும் ஞாபக நிறைவும்
உம்மையோ டிம்மைசேர் காலமுமே

# கனவுக் காவியம்

இயற்கை எழிலொடு செகமுங் கலக்க
எச்சமோ டிச்சையுஞ் சேர்ந்தவுடன்
அயலென் றொன்று மில்லா நிலையை
அடைந்த நித்தியன் நானேதான்!

இதுவரை எல்லாம் பிரித்துப் பார்த்தும்
எதையுந் தனியாய் வைத்திங்கே
"இதுதான் நானெ"ன் றடித்துச் சொல்ல
ஏனோ என்னால் முடியவிலை!
கதுவும் மனத்துள் தெளிவு பிறந்தும்
காரணஞ் சொல்ல முடியவிலை!
ததும்பாக் குடமா யிருக்கின் றேன்நான்
தண்ணீ ருண்டா? யாரறிவார்?

எங்கும் என்றும் எதிலும் நானே
என்றச் சுந்தர நிலையுற்றும்
பொங்கு மகந்தை சற்று மின்றி
பூச்சியந் தானென் றுணர்வோடு
இங்கே வறிய மாந்தருள் தன்னை
----- என்றும் நிலையாய் கண்டுற்று
தங்குஞ் சத்தியச் சிந்தனை யோடு
தாங்கு மடியன் "இதுதான்நான்"!

# மந்திர மொன்றறிந்தேன்

மந்திர மொன்றறிந்தேன் - மதி
வாணணை யுள்ளுணர்ந்தேன்
தந்திரக் காட்சியெல்லாம் - தலை
தாழ்த்தியே தானடங்க
எந்திர மேனியதில் - ஏறும்
ஈச னொளியாட்டம்
நந்தியம் பெம்மானும் -நாடும்
நமசிவாயமதுவே

வேதமாம் சாமத்தையே - உயர்
வெந்நீறு மெய்பூசி
கீதம் நரம்பிசைக்க - மதி
கேசத்திடை வழுக்க
பேதங்க ளேதுமின்றி - அய்யன்
பெருவிரல் தான்விலக்க
நாதத்தால் இராவணனும் - சேர்ந்த
நமசிவாயமதுவே

பாட்டிலே பண்ணிசை பார் - பசும்
பாலிலே நெய்யதைப்பார்
காட்டிய பாதையதில் - கள்ள
காட்சியின் மூச்சடைத்து
ஏட்டிலும் ஏறாதே - ஏற்கும்
இன்ப பொருள தனை
நாட்டத்தில் நாவதுவும் - நல்கும்
நமசிவாயமதுவே

இகபர விதிகேட்டு - பல
இன்னலு மீதுற்று
சுகமெதும் காணாதே - வீணே
சுற்றிடு மதிகெட்டோர்
தகவுடன் சிவபதமே - சேரத்
தான்மறை ஒன்றுரைப்பேன்
நகர்ந்திடு நவகோள்கள் - போற்றும்
நமசிவாயமதுவே
நமக நகரத்திலே - வேண்டும்
சமக மகரத்தையே
கமக சிகரத்திலே - நிற்கும்
கான வகரத்தையே

தமரு யகரத்திலும் - ஓங்கித்
  தாங்கு மாலவனும்
நமசிவாயமதுவை - நாடும்
  நமசிவாயமதுவே

நமசிவமந்திரம்

எங்கும் சிவமெனப் போற்றும் அடியவர் எங்களுக்குப்
பொங்கும் பொருளதை நல்கும் பரிமளப் புண்ணியனே
தங்கத் திருவடி தேடித் திரும்பிய சத்தியனும்
மங்காப் புகழுடன் வாழ்த்தும் நமசிவ மந்திரமே!



## நண்பன்

உற்றவென் நண்பனுமே - இன்று
ஓங்கி அறைந்தாற்போல்
சொற்றுணை யோடென்னை - வெகு
சூடாய்ப் பழித்திட்டான்
கற்றஅந் நாள்முதலாய் - என்றன்
கல்யா ணநாள்வரையில்
பற்றுடன் தானிருந்தேன் - இன்றோ
பாசம் மறந்தேனாம்!

"என்னநீ செய்கின்றாய்? - தினம்
எங்குநீ செல்கின்றாய்?
இன்பமோ துன்பங்களோ - அதை
என்னுடன் பகிர்ந்தாலென்?
உன்னையே கேட்டிடுநீ - உற்ற
உறவிலே பங்கமுமேன்?"
என்றுவென் நண்பனுமே - வாதம்
என்னுடன் புரிந்திட்டான்.

என்னநான் சொல்லிடுவேன் - பதில்
எங்குதான் தேடிடுவேன்
என்னையே கேட்கின்றேன் - உண்மை
இதுவென ஏதுமுண்டோ?
என்மனம் நோகும்படி - அவன்
ஏதுவும் சொன்னானா?
என்சுடு வார்த்தைகளால் - நான்
ஏதேனும் சுட்டேனா?

சூடாய் உரைத்திருந்தால் - உடன்
சுடசுடத் தந்திருப்பான்
பாடாய் அவனுமென்னை - மேலும்
படுத்தி எடுத்திருந்தால்
போடா வெனநானும் - விட்டு
போக நினைப்பேனா?
வாடா மலரதனை - பிய்த்து
வாட விடுவேனா?

# கனவுக் காவியம்

கௌசிக ஞானியுடன் - நட்பு
  காட்டிடும் யாவருமே
நாசிமேல் கோபத்தில் - கனி
  நட்பையே கண்டிடுவர்
பேசிடும் வார்த்தைகளில் - அன்பு
  பூப்பில் குழைந்திடுவர்
பாசி பிடித்தாலென்? - அதுவும்
  பாசம் பிணைந்ததன்றோ?

ஆகவே எங்களுக்குள் - ஏதும்
  அடிதடி இல்லையென
வேகமாய் விளங்கிற்று! - பின்னே
  விளக்கம் எதுவாகும்?
பாகனே! உன்னடியில் - மனம்
  பற்றியே உற்றதனால்
ஏகமாய் எல்லாமாய் - நீ
  என்னையும் ஆட்கொண்டாய்!

ராசீரா - 31 oct 2006

# ஒன்று

ஒப்பில்லாப் பொருளொன்று, ஒளிவீசும் கதிரொன்று,ஓசை ஒன்று
உமையவளும் அருள்நாடும் பதியொன்று கதியொன்று மதியும் ஒன்று
செப்பிடும்நல் ஐந்தெழுத்துச் சிவமொன்று தவமொன்று சீற்றம் ஒன்று
சித்திக்கும் நீறொன்று தினம்நாடும் தமிழொன்று தாளம் ஒன்று
அப்பனுடன் அம்மையுமாய் ஆட்சியொன்று புரிகின்ற ஆற்றல் ஒன்று
ஆட்டத்தின் அசைவொன்று கனமொன்று கணமொன்று காந்தம் ஒன்று
எப்போதும் எங்கேயும் எல்லாமாய் எமைத்தாங்கும் ஏந்தல் ஒன்று
எருதேறி காக்கவரும் சுந்தரன்தாள் நாடுகின்ற ஒன்றும் ஒன்றே!

ஒன்றுக்குள்ளே ஒன்றை வைத்தே ஒன்றவைக்கும் ஒன்றது
ஒன்றைவிட்டே ஒன்றைப் பார்க்க ஒன்றுமில்லா ஒன்றது
ஒன்றிப்போன ஒன்றை நாடும் ஒன்று மில்லா ஒன்றது
ஒன்றேஒன்று, ஒன்றேஎன்ற ஒன்றுபோதும் ஒன்றவே!

ஒன்றை ஒன்றிட ஒன்றிலா ஒன்று,
ஒன்றே ஒன்றது! ஒன்றிலா ஒன்று
ஒன்றாய் ஒன்றிட, ஒன்றிலா ஒன்று
ஒன்றில் ஒன்றிடும்! ஒன்றிலா ஒன்று!

# வருவேன்

அடடா அந்த உணர்வுகள் என்னைச் சிந்தையில் ஆழ்த்திடும் மெய்யா!
அதிசயம் அதனில் மகிழ்வுறும் போதில் கைவிட வேண்டாம் அய்யா!

ஈயின் சிறகிசை எழுப்பும் புயலலை
இப்பனித் துளிக்குள் இருங்கடல் ஆழம்
ஆழக் குகைக்குள் அமைதியின் ஓலம்
உறக்கச் செலவில் ஒளிதரு வேகம்

அடடா அந்த உணர்வுகள் என்னைச் சிந்தையில் ஆழ்த்திடும் மெய்யா!
அதிசயம் அதனில் மகிழ்வுறும் போதில் கைவிட வேண்டாம் அய்யா!

வெள்ளைத் தெறிப்பில் விதவித வண்ணம்
தூசி பரத்தத் தொடரும் நிறங்கள்
வித்துக்குள்ளே விளைந்திடு விருட்சம்
செயல்கள் போடும் சீரிய பாதை

அடடா அந்த உணர்வுகள் என்னைச் சிந்தையில் ஆழ்த்திடும் மெய்யா!
அதிசயம் அதனில் மகிழ்வுறும் போதில் கைவிட வேண்டாம் அய்யா!

அடக்க முனையும் அன்பு விவாதம்
உன்னை நம்புவேன் ஒருபலம் கிட்டும்
ஆசைப் பொறிதரும் அளப்பரும் பெருந்தீ
தேடி உனையே சிதையிலும் படுப்பேன்

அடடா அந்த உணர்வுகள் என்னைச் சிந்தையில் ஆழ்த்திடும் மெய்யா!
அதிசயம் அதனில் மகிழ்வுறும் போதில் கைவிட வேண்டாம் அய்யா!

மலைகள் கடல்கள் வானம் கடந்தேன்
வழியில் மயக்கும் தேவதை வனப்பு
உன்னுடன் கிடந்தேன் ஒருகுகை ஆழம்
அது பேரின்பம் அகன்று போகாதே!

## கவிஞர் ராசீரா

அடடா அந்த உணர்வுகள் என்னைச் சிந்தையில் ஆழ்த்திடும் மெய்யா!
அதிசயம் அதனில் மகிழ்வுறும் போதில் கைவிட வேண்டாம் அய்யா!

மகிழ்ச்சி, கிளர்ச்சி மலரும் பேரின்பம்
அளப்பரும் அன்பின் அற்புத ஈர்ப்பு
"பொழுது போயிற்று " போட்டனை குண்டு
"அட, என் இறைவா , அமைதி குலைத்தாய்"

அடடா அந்த உணர்வுகள் என்னைச் சிந்தையில் ஆழ்த்திடும் மெய்யா!
அதிசயம் அதனில் மகிழ்வுறும் போதில் கைவிட வேண்டாம் அய்யா!

எங்ஙனம் இருப்பேன் என்று கதறினேன்
கண்ணாடி காட்டினாய், "ஈதென் தோற்றம்"
என்றேன் திமிராய்""என்னை உன்னில்
என்று காண்பையோ அன்று வா" என்றனை

அடடா அந்த உணர்வுகள் என்னைச் சிந்தையில் ஆழ்த்திடும் மெய்யா!
அதிசயம் அதனில் மகிழ்வுறும் போதில் கைவிட வேண்டாம் அய்யா!

ஆயிர மாயிரம் ஆண்டு களாக
அந்தக் கணங்கள் அய்யா தெரிந்தன
என்னிடம் எழுப்பினாய் பேரின்பத்தீ
இன்னும் விழைவாய் வருவேன் இணைவேன்!

அடடா அந்த உணர்வுகள் என்னைச் சிந்தையில் ஆழ்த்திடும் மெய்யா!
அதிசயம் அதனில் மகிழ்வுறும் போதில் கைவிட வேண்டாம் அய்யா!

## தேடல்

கண்களை மூடினேன் கால்கோடிச் சிந்தனை
கத்தி முனைபோல் ஒன்றிக் கிழிக்க,
காரிருள் குகையுள் கந்தகப் பயணம்
காரணம் தெரியக் கருத்தைப் பற்றிட,
கானல் நீர்போல் ஓரொளித் தோற்றம்
கிட்டே செல்ல, எட்டிப் போகும்
கருத்தை விடாது கூர்ந்து பிடிக்கக்
கருமை கலைந்து மஞ்சள் தோன்றும்!

மஞ்சள் சாய்க்கச் செம்மை தோன்றும்
சிகப்பைச் சிதைக்க நீலம் காட்டும்
நீலம் நசுக்க, பலவர்ண ஜாலம்
அதனுள் இறங்க, கண்கூசு வெண்மை
கதிரோன் கதிர்யாவும் ஒன்றாய் இணைந்து
கூட்டம் நடத்திக் காட்டும் மேடை!

வெள்ளைச் சுடரில் ஏதோ தோன்றும்
ஒன்றும் புரியா ஏதோ உணர்வு!
எறும்பின் முன்னே யானை நின்றால்
நகமே யானை என்றே எண்ணும்!!
என்றன் முன்னால் தெரியும் தோற்றம்
ஒன்றும் விளங்கா விந்தை தானோ?
இத்தனை தூரம் வந்த பின்னே,
திரும்பிச் செல்ல விடவே மாட்டேன்!

கருத்தில் ஒன்றி ஆழம் கூட்ட,
எங்கும் துள்ளல், எதிலும் ஆட்டம்
எங்கும் அசைவு, அசைவி லமைதி
அமைதியி லாக்கம், ஆக்கத்துள் அழிவு
அழிவில் நிறைவு, நிறைவில் தெளிவு
தெளிவி லுண்மை, உண்மையுள் ஈசன்
ஈசனே உண்மை, ஈசனே எங்கும்
எங்கும் துள்ளல், எதிலும் ஆட்டம்!!

அடடா! ஈதென்ன மாயக் கனவா?
முன்பார்க்கும் கண்களால் காணொணாக் காட்சி
எத்திசையும் ஓர்சமையம் காணும்சக்தி நானாபெற்றேன்?
ஆஹா! அத்தா! இதுவா நின்தோற்றம்???

ஈசா ஈசா ஈசா ஈசா!

ஓம்!



# கேள்வி

பாலுக்குள்ளே இனிப்பும் எங்கே இருக்குது காட்டு - என்று
பாலன்என்னைக் கேள்வி கேட்டான் மடக்கியே போட்டு

பாலுக்குள்ளே சீனி வெல்லம் போட்டிருப்பாளோ? - உன்றன்
பாசமிக்க தாயும் அந்த விடைகொடுப்பாளோ?

என்றுகேட்ட என்னைப் பார்த்துச் சிரித்துச் சொல்கிறான் - அவன்
இனிமையான குரலின் மூலம் என்னை வெல்கிறான்

"அப்பாகொஞ்சம் கண்ணைமூடி நாக்கையும் நீட்டு" - என்றான்
அச்சுவெல்லம் அத்தனையும் வாயிலே போட்டு!

காளிதாசன் சம்பந்தன்போல் நாவைக் காட்டினேன் - நானும்
கற்பனையில் காளிசெய்கை நெஞ்சில் கூட்டினேன்

"போதும் விடு" என்றே தாயின் குரலும் வந்தது - "அம்மா
போதாதின்னும் பாக்கி உண்டு" விடையும் வந்தது!

என்ன சதி நடக்குதிங்கே ஒண்ணும் தெரியலே! - அய்யோ!
இந்த விளை யாட்டெதெற் கென்றேதும் புரியலே

"அப்பா கண்ணைத் திற இனிமேல் " என்ற கட்டளை - உடன்
அப்பன் நானும் அதிர்ந்து கேட்டேன் வந்த சொற்களை!

"பாலுக்குள்ளே வெல்லம் சேர்க்க இனிப்பது போலே, - அப்பா
பார் இனியுன் சொற்கள் கூட இனிக்கும் மேன்மேலே"
என்று சொல்லிச் சிரிக்கும் பையன் சொல் விளையாட்டா- இல்லை
இவனைச் சொல்ல வைத்துப்பார்க்கும் இறை களியாட்டா?

## குருவாய்....

குருவாய்
வந்தாய்
அருளாய்த்
தந்தாய்
கருவாய்
வந்தாய்
மதியுள்
சென்றாய்
உருவாய்
அருவாய்
ஒளியாய்
ஒன்றாய்
கனவாய்
இலதாய்
நினைவாய்
நின்றாய்
உனைநான்
கண்டேன்
இன்புற்
றிருந்தேன்
நிழல்நான்
திரும்ப
நிஜம்நீ
சொன்னாய்
அந்தோ
கொடுமை
ஈதென்ன
சாபம்
உன்னோடு
இருக்க
ஓர்வழி
கேட்டேன்

## கனவுக் காவியம்

ஒருநாள்
வருவாய்
எனநீ
சொன்னாய்
அந்நாள்
எந்நாள்
எனநான்
கேட்டேன்
உனைநீ
பார்க்க
எனைநீ
காண்பாய்
அந்நாள்
அறிவாய்
அம்பலம்
சேர்வாய்
பொய்யை
அழிப்பாய்
மெய்யை
மதிப்பாய்
ஜதிக்கு
நடப்பாய்
புவியைக்
கடப்பாய்
நிழலைக்
கிழிப்பாய்
நிஜத்தில்
குளிப்பாய்
உனைநீ
மறப்பாய்
எனநீ
சொன்னாய்

என்னில்
உனைநான்
தேடிப்
பார்த்தேன்
என் உடல்
கண்டேன்
உன் ஒளி
இல்லை
உன்னொளி
காணக்
கதறுகின்றேனே
என் ஒலி
கேட்டுத்
தெளிய
வைப்பாயே!

17 -10-1999

# தந்திரக் கோட்டைகள்-

ஏழடிக் கட்டளை

சூடிப் பலமுறை சுற்றியே வந்தயிச் சுந்தரனும்

வாடி வதைபட்டு வந்ததன் நோக்கமும் மாயையினால்

மூடி மறைபட முன்னவன் நின்னருள் மோதலினால்

தேடித் திரிவதைச் சிந்தையிற் கொண்டுநான் சீலர்களை

நாடி வழிபட நல்லதோர் செவ்வழி ஞானத்தினால்

பாடிக் குருபதம் பற்றிட வந்திங்கு பாலித்தவே

கோடி கொடுப்பினும் கூடிடாத் தந்திரக் கோட்டைகளே!

14-5-2011

# கண்ணுறங்கும்

கண்ணுறங்கும் வேளையிலே கங்குகவி நானெழுதிப்
பண்ணிசைத்து அத்தனுக்குப் பாடிநின்றேன் - கண்ணா!
தொலைக்காட்சி நல்கும் தொடர் பார்க்கச் சென்றார்
மலைப்புத்தான் வள்ளுவனின் வாக்கு.
அத்தன் பதில்
கண்ணுறங்கும் வேளையிலே கங்குகவி கேளென்றால்
எண்ணுறங்கிப் போகாதோ? எப்படிநான் -
பண்ரசிப்பேன்
தூங்குமுன் சற்றே தொலைக்காட்சி பார்ப்பதனால்
ஆங்குவரும் தூக்கம் அறி!

## தத்துவ சோதனம்

ஈடில் வித்யா தத்துவத்தின்

இலக் கணத்தை, இதுவரையில்

தேடிக் கிடைத்த இரகசியத்தை

தெளிந்து கொள்ளப் பூடகமாய்ப்

பாடிக் கொடுக்கப் போகின்றார்

படித்துத் தெளிந்தால் நல்லதுதான்

ஏடு தடவும் இப்பாடல்

என்ன சொல்லப் போகிறது?

இலந்தை

### தத்துவ சோதனம்

தோரணம்
ஓடும் வாழ்வில் உதிரும் பொருளைத்
தேடும் மாந்தர் திருந்தும் வழியைப்
பாடும் மறையில் பதித்த முறையை
நாடும் சிலர்க்கு நவில்வேன் நன்றே!

தத்துவப் பஞ்சகம்

சிவனுள் சக்தி சேரச் சதாசிவ
தவமாம் அகந்தா தத்துவ மாற்றம்
இவனுள் இதந்தா ஈஸ்வர மயக்கம்
இவையே சுத்த வித்யா ஞானம்

மயக்கம் மறைக்க மாயை தோன்றும்
தயக்கம் சேர்ந்தால் சறுக்கும் பலகலை
சுயநிலை மறைக்குத் தொடரும் அவித்யை
பயக்கும் பந்த பாசமும் ராகமே

## கனவுக் காவியம்

<u>காலம்</u> போடும் கட்டுப் பாடு
கோலம் போட்டுக் கூட்டும் <u>நியதி</u>
பாலம் போன்ற பலமிகு <u>புருஷன்</u>
ஞாலம் பிறக்க நினைத்தான் நன்றே!

தன்னில் முக்குணம் சமமாய்ப் <u>ப்ரக்ருதி</u>
தன்னை உயர்த்தும் தன்<u>னகங் காரம்</u>
தன்னைப் பிரிக்கும் தன்னுயர் <u>புத்தி</u>
தன்னை விரிக்கும் தன்னுடை <u>மனமே</u>!

<u>பஞ்ச-தன் மாத்திரை</u> <u>பஞ்ச-ஞா னேந்த்ரியம்</u>
<u>பஞ்ச-கர் மேந்த்ரியம்,</u> <u>பஞ்ச-மா பூதமும்</u>
விஞ்சிடும் கலவையே வித்தகா, ஜீவனே
கொஞ்சமே உணர்ந்திடில் குலையும்மும் மலங்களே

தத்துவ சோதனம்
ஒன்றன் உள்ளே ஒன்றைச் சேர்க்க
ஒன்றோ டொன்றும் ஒன்றாய் மாறும்
ஒன்றொன் றையுமே ஒன்றிச் சேர்க்க
ஒன்றே மிஞ்சும்,உண்மை! ஒன்றே!

சித்தாந்தம்
தேடும் தெளிவு, திண்ணம் தானே
தேடும் தானும் திண்ணம் தானே
தேடல் செயலும் திண்ணம் தானே
தேடல் தெளிவு தேடுவன் ஒன்றே!

ஐக்கியச் சிந்தனை
தேடும் தெளிவும், சேர்க்கும் வழியும்
தேடும் தெளிவைச் சேரும் வழியை
நாடும் தானும் நவிலும் குருவும்
கூடு மாயை! வீடது ஒன்றே!

<u>முடிப்பு</u>
இந்தத் தேடல் இலக்கின் நிலையும்
அந்த இலக்கை அடையும் வழியும்
சிந்திக் குஞ்சிலர் செயல்படத் துணையாய்
வந்திவ் வரங்கில் வழங்கி மகிழ்ந்தேன்!

# எங்க ஊரு ஆச்சி

கருப்பு வெள்ளை மேனி - இவ
 கயத்தாற்று ராணி
நெருப்புப் போன்ற பார்வை - மனம்
 நெகிழவைக்கும் கோவை

சுருக்குப் பையை போல - தோல்
 சுருங்கிபோன பின்னும்
விரிந்த வானம் வெட்க - அவள்
 விடைதருமிக் காட்சி

தங்கச் சிலை அல்ல - இவள்
 சரித்திரத்தின் சாட்சி
சிங்கக் குழல் உண்டு - ஆம்
 சீறுமாற்றல் உண்டு

பொங்கு கின்ற புதுமை - இவள்
 பொதிகை தந்த பதுமை (அட)
எங்க ஊரு ஆச்சி - தரும்
 ஏற்ற மிக்க காட்சி

நட்டும் போல்டும் கூட - தங்க
 நகையில் கொண்ட பாங்கு
விட்டுப் போன பல்லும் - ஒரு
 திட்டம் போலத் தோன்றும்

எட்ட நோக்கும் கண்ணில் - ஆழ்
 ஏக்கம் தோய்ந்த பார்வை
சுட்ட பழமாய் மேனி - தரும்
 சொக்க வைக்கும் காட்சி

சூது வாதே இன்றி - இவள்
 சூடும் சிரிப்பில் ஒன்றி,
ஓது ஞானம் யாவும் - அன்பில்
 ஒருங்கிணைந்த தென்றும்,

ஏதுமில்லா வாழ்வில் - எல்லாம்
 இருக்கும் போதம், மற்றும்,
காது வளர்க்கும் வித்தை, - புத்தன்
 கற்று கொண்டதிங்கோ?

## கனவுக் காவியம்

ஏகபோகமாக - வாழ்ந்த
ஏற்ற மிக்க நாட்டில்
நாகரீகப் போர்வை - போட்டு
நசுக்கிவிட்ட தந்தோ!

நாகம் புலியைக் காக்க - நல்ல
நாட்டமுண்டு நாட்டில்
வேக மாக மறையும் - இவர்கள்
விஞ்ச வைப்பாய் ஈசா!



# அம்மா

My loving mother departed from her earthly body and merged with the Universal Consciousness on Feb 3rd 2016. Here is a poem I penned on my mother....An earlier poem is merged.

என்னைக் கருவில் சுமக்கையிலே,
என்ன வெல்லாம் நினைத்தாயோ?
என்றன் நிறத்தை, வடிவத்தை,
எண்ணிப் பார்த்து மகிழ்ந்தாயோ?
உன்னை உள்ளே உதைக்கையிலே
உறங்கும் போதும் சுவைத்தாயோ?
உன்றன் கனவுக் காவியத்தின்
உயிராய் நானும் வாழ்ந்தேனோ?

உன்றன் உணவை எனக்கூட்டி
உற்ற துயரை மறந்தாயோ?
என்னைச் சுமந்த போதினிலே
எல்லாச் சுவையும் தலைகீழாய்
என்னே ஆச்சு? வியந்தாயோ?
என்னைத் துளியும் கடிந்தாயோ?
உன்றன் கனவுக் காவியத்தின்
உயிராய் நானும் வாழ்ந்தேனோ?

உன்றன் உடலில் ஓர்பங்காய்
உயிர்த்து நானும் இருக்கையிலே
என்றன் மனமென்(று) ஒன்றுண்டா?
இல்லை அதுவும் பங்கீடா?
உன்றன் மனத்தின் ஆசைகளை
உள்ளே ஊட்டி வளர்த்தாயோ?
உன்றன் கனவுக் காவியத்தின்
உயிராய் நானும் வாழ்ந்தேனோ?

## கனவுக் காவியம்

ஒன்றா? இரண்டா? ஈரைந்து!
ஒன்றாய்த் தவமும் புரிந்தோமோ?
சின்னச் சின்னக் கனவுபல
சேர்ந்தே நாமும் கண்டோமோ?
இன்சீ னியரா? மருத்துவரா?
எதுவாய் என்னை வரைந்திட்டாய்?
உன்றன் கனவுக் காவியத்தின்
உயிராய் நானும் வாழ்ந்தேனோ?

குன்றாய்க் குணத்தில் திகழ்வானே
கூடி வாழ்ந்து மகிழ்வானே
வென்றே சகத்தை வருவானே
வேண்டு பவர்க்கே அருள்வானே
என்றே கனவு பலகோடி
என்னைப் பற்றிக் கண்டாயோ
உன்றன் கனவுக் காவியத்தின்
உயிராய் நானும் வாழ்ந்தேனோ?

என்ன வெல்லாம் செய்தேனோ
ஏனோ எனக்கு நினைவில்லை!
உன்றன் மனத்தை என்றேனும்
ஊறு தந்து நடந்தேனோ?
இன்பம் ஏதும் தந்தேனோ
இல்லை வாட்டம் தந்தேனோ?
உன்றன் கனவுக் காவியத்தின்
உயிராய் நானும் வாழ்ந்தேனோ?

உன்ற னுக்கே நான்முகனும்
உருவாக் குகிற வித்தைதரின்
என்னை எதுவாய் எவ்வாறாய்?
இல்லை இதுபோல் இவ்வாறாய்?

உன்னை கேட்க நினைக்கின்றேன்
ஒளிக்கா தேநீ விடைதருவாய்
உன்றன் கனவுக் காவியத்தின்
உயிராய் நானும் வாழ்ந்தேனோ?

இன்றைக் கீசன் அழைத்துவிட்டான்
ஈன்ற தெய்வம் நீ சென்றாய்
கன்று நானும் மிகக்கலங்கிக்
கடைசிக் கேள்வி கேட்கின்றேன்
அன்றைக் கென்னைச் சுமந்ததுபோல்
அடுத்த சன்மம் நமக்கிருந்தால்,
என்னைத் திரும்பச் சுமப்பாயோ?
இன்பம் அதிலே காண்பாயோ?



உன்றன் கனவுக்
காவியத்தின்
உயிராய் நானும்
வாழ்ந்தேனோ?

கனவுக் காவியம்

## யாதுமாகி நின்றாய்..

இந்த தலைப்பில் எதை எழுத
என்றே வெகுவாய் நான் மலைத்தேன்
சொந்த வாழ்க்கைக் கதை சொலவோ
கற்ற கல்வி பகிர்ந்திடவோ
எந்தத் தெளிவும் இல்லாமல்
எதைத் தான் எழுத என்றிருக்க
எந்தப் பக்கம் பார்த்தாலும்
இதுவே என்னை விழுங்கியதே !

சின்ன வயது முதல் கொண்டு
தேவை அறிந்து தான் தந்த
என்றன் தாயின்பெருமை தனை
எல்லாம் பகிர நான் நினைத்தேன்
கன்றின் உலகம் தாய் தானே
கருணை வடிவம் அவள் தானே
இன்ன படியென் றே வகுத்து
இதமாய் வாழ்ந்த தெய்வம் அவள்

கண்ணில் என்னைத் தான் காத்தாள்
காற்றும் தீண்டா வகை பார்த்தாள்
பன்னிரெண் டகவைப் பாலகனை
பலரும் நகைக்கப் பார்த்தாலும்
வண்டியில் மகளிர்பெட்டி தனில்
வகையாய் ஏற்றி பத்தி ரமாய்க்
கொண்டுச் சேர்க்கும் அவள்பாங்கு
கூட இருந்தவர் தான் உணர்வார்

நான்கு வயதில் ஊட்டி விடும்
நற்றாயைப் பற்றி அறிந்தி ருப்பீர்
நாற்பது வயது ஆன பின்னும்
நினைந்து ஊட்டும் அரும் தெய்வம்
என்றன் வாழ்வில் இவள் இன்றி
ஏதும் நடந்து நான் அறியேன்
என்னைச் சின்னக் செதில்செதிலாய்
செதுக்கிப் பார்த்தாள் என்னம்மா

சட்டை வேட்டி ,தலைமுடியைச்
சீவும் பாங்கு கடி காரம்
கட்டுக் கோப்பாய் நான் வாழக்
கல்விக் கூடம் நல் தோழர்

## கவிஞர் ராசீரா

விட்டுக் கொடுக்கும் மனப் பான்மை
வீட்டை அமைக்கும் வகை நேர்த்தி
கெட்ட எண்ணம் தனை வீழ்த்த
கிட்டே இருந்து தோத் திரங்கள்

பாட் டு,வரையும் கைவண்ணம்
பரிவாய் ஒன்றும் இறைபக்தி
நாட்டுப் பற்று, நற்தொண்டு
நல்மரி யாதை பண்பாடு
ஏட்டுப் படிப்பில் தீர்மானம்
ஏற்றம் தரும்தன் நம்பிக்கை
கேட்டுக் கேட்டு விருந்தோம்பல்
கெட்டவர்க்கும் அருள் நெஞ்சம்

பயமே அறியா துணிச்சலுடன்
பாரின் ஞான நீதிகளும்
இயற்கை இரசனைப் பயணங்கள்
இவை எல்லாமும் ஊட்டினளே
இயம்ப ஒண்ணா உயிற் பங்காய்
என்னுள் வாழ்ந்தே எ ல்லாமாய்
சுயமாய் நானும் வாழ்ந்திடவே
யாதுமாகி அவள் இருந்தாள்

இப்படி இருந்த என்தாயும்
ஏனோ மறைந்து போனாளே
எப்படி நானும் வாழ்ந்திடுவேன்
இவள் இன்றி வேறறியேனே
எப்போதும் அவள் நிழல்மீதே
வாழ்ந்து பழகிப் போனதனால்
இப்போது அவள் இல்லாமல்
**வெறுமை பற்றிகொண்டதடா**

**வெறுமை வந்த பின்னாலே**
**எல்லாம் அவளென்** றுரைப்பதுவோ
சிறிதே நானும் யோசித்தேன்
சித்தம் தெளிவு பெற்றதடா
சுற்றம் பற்று யாவையுமே
சுய தேவை தீர் வரைதானே
பெற்ற பிள்ளை என்றாலும்
காலக் கோட்டின்வரையண்றோ

எனக் கெல்லாமாய்த் தானிருக்க
என்றும் அழியா உருவேண்டும்
மனதின் உடலின் தேவையெல்லாம்
மதியை மயக்கும் அழிவுபெறும்
என்னில் என்னை நீக்கிவிடின்
எதுவும் இன்றிப் போகுமன்றோ
என்றன் ஆத்மா தான்மட்டும்
யாதுமாகி நிறைந்திருக்கும்.

## வெண்பா - விருத்தம்

உன்னருள் தான்வேண்டி, உண்மையும், நல்பேச்சும்,
தன்னலம் இன்றிநல்கும் தன்மையும் - தன்னுள்ளே
சின்னமாய்க் காய்ச்சிடவே, செந்நகர்வாழ் மைந்தனுன்னை
இன்னிசைப்பண் ஏற்றுவன்தாள் ஈர்த்து

அறுசீர் விருத்தம்

உன்ன ருள்தான் வேண்டி, உண்மை யும்,நல் பேச்சும்
தன்ன லமின்றி நல்கும் தன்மை யும்தன் னுள்ளே
சின்ன மாய்க்காய்ச் சிடவே செந்ந கர்வாழ் மைந்தன்
உன்னை இன்னி சைப்பண் ஏற்று வன்தாள் ஈர்த்து

கவிஞர் ராசீரா

# ஜெயலலிதாவுக்கு அஞ்சலி

என்னை உன்றன் வயிற்றினிலே
ஈன்ற தாயும் நீயில்லை
உன்னை எண்ணி நாளெல்லாம்
ஒன்றும் நானும் ஏங்கவிலை
உன்றன் மேடைப் பேச்சினிலே
ஊறும் தொண்டன் நானில்லை
என்றன் தொண்டைக் குழியினிலே
ஏனோ அடைப்புத் தோணுவதே!

*

எப்போ தெதிர்ப்பு நினக்கு வந்தாலும்
சப்பையாய் உன்பாதம் சாடியே வீழும்
இப்போது வந்தயிவ் இருதய நோயும்
அப்போதே வீழுமென் றேமாந்து போனேன்

*

சிங்கம் போலப் பார்வையில்
சீற்றம் எங்கு தேடுவேன்
வங்க அலையின் ஆற்றலை
வானில் போயா தேடுவேன்
தங்கம் போன்ற தரணியின்
தாயை எங்குத் தேடுவேன்
எங்கும் பரவும் சோகத்தில்
ஏனோ கனவை நாடுவேன் !

(இது கனவாய் இருக்ககூடாதா என்ற ஏக்கம்)

இத்தனை உணர்வு உனக்காக நான்
எனக்குள் ளேவைத் திருந்தேனோ
பொத்தனைத் தட்டி விட்டாற்போல்
பட பட வெனமனம் அடிக்கிறதே
சித்தனைப் போல வாழ்ந்துவந்தேன்
சிறுகலக்கம் கூட வந்ததில்லை
சத்தியமாகக் கூறுகிறேன் உனைச்
சவமாய்க் காண முடியவில்லை

இந்த ஆண்டும் என்றன் வாழ்வில்
இல்லாமல் தான் போகாதோ
சொந்தத் தாயை இழந்து நானும்
துடித்திருக்கும் போதினிலே

## கனவுக் காவியம்

வெந்த புண்ணில் வேலைப் பாய்ச்சும்
வேலை செய்யும் வில்லனென
இந்தத் தாயை இரக்கமின்றி
இறைவன் எடுத்துப் போவதுவோ

எத்தனை எத்தனை எதிர்ப்புகள் தாண்டி
சித்தமாய் வந்தனை முதல்வராய் அம்மா
இத்தனை இத்தனை தொண்டர்கள் மனத்தில்
நித்தியம் நிற்பாய் தெய்வமாய் லலிதா !

# I will, I will

Oh! Those feelings that made me ponder
Dont Let me go when I am fonder and fonder
Waves of the wind from the flap of a fly
Depth of an ocean in a dew nearby
Roar of the silence from the cave so deep
Speed of the light in the travels of sleep
Oh! Those feelings that made me ponder
Dont Let me go when struck with wonder
Colors all galore in a tinge of white
Speck of dust emits color delight
Might of an oak stowed in a seed
Paths laid down based on the deed
Oh! Those feelings that made me ponder
Dont Let me go when struck with wonder
Control and check with logic and love
Trust in thee, gives the strength above
Unbound fire sparked by unknown desire
In search of thee, I can lay on my pyre !

## கனவுக் காவியம்

# கனல் மணக்கும் பூக்கள்

இதுவென்ன தலைப்பென்று இருநிமிடம் நினைத்திருந்தேன்
பொதுநலன் கருதிப்பூத்த புதுமையோ புரட்சிதானோ
எதுவெண்ணி இத்தலைப்பு எந்தையிடம் கேட்டுப்பார்தேன்
எது புதுமை இதுவாவென்று எள்ளிநகை செய்துவிட்டார்

கவிவேந்தன் சொற்களடா கனல்மணக்கும் பூக்கள்
செவிகொடுத்து யோசிடுநீ சீறிக்கொண்டு சாடும்
புவிதன்னில் பலவுண்டு பூத்திடும் உன்னுள்ளே
சுவைத்தேநீ மெருகேற்றிச் சொல்லிவிடு என்றார்

நிலமேவும் நந்திப்பூ நீர்காணும் நெய்தல்பூ சிறுபூளைப்பூ
நெருப்பிலும் பொறிபறக்கும் தீச்சுடர்ப்பூ காற்றாடிப்பூ
சிலநேரம் விண்ணில்தோன்றும் விமானப்பூ விண்நட்சத்திரப்பூ
சிந்தித்தால் சேரும் நமை நாடி பெருந்தத்தளிப்பூ
பலமான நடிப்பூ, துடிப்பூ, பிடிப்பூ, சிரிப்பூ, தேமாந்தண்பூ
பசப்பூ கசப்பூ துவர்ப்பூ இனிப்பூ புளிமாந்தண்பூ
குலம்வாழ நாம் நாடும் நட்பு விருப்பு பொருப்பு பெருங்களிப்பு
கூறிடுவீர் சான்றோர்காள் இதிலெதுதான் கனல்மணக்கும்பூ
?

சிலசில கனங்கள் தலைப்பை யோசித்துத் தானிருந்தேன்
பலபல நினைவு ஓட்டம் படர்ந்து விரிந்ததங்கே
கடகட களைகள் கிள்ளி கண்மூடித் தான்பார்க்க
அட அட அவைகள் யாவும் ஒன்றினுள் ஒன்றானவே

ஒலியின்றி ஒலிகேட்கும் செவியின்றி ஓசையின்றி
ஒளியின்றி ஒளிகாணும்கண்ணின்றி காட்சியின்றி
வலியின்றிவலியவரும்வினையின்றி வாட்டமின்றி
மனமின்றி மனமேற்றும் மதியின்றி மாயையின்றி
கலியின்றி கிலியின்றி கனவின்றி கனம்கூட கனமில்லா
காலத்தே இறப்பின்றி நிகழ்வின்றி பிறப்புமின்றி
நிலமின்றி நீர்தீயின்றி வானின்றி நீயின்றி (அட)
நானின்றி நாடும் அவனுமின்றி தானாகத்தானிருந்தேன்

தூங்கியே கிடக்கும், சன்மம் தான்பல வந்து போகும்
ஓங்கிய சக்கரப் பூவோ மொட்டாக வெந்து போகும்
தேங்கிய பிறப்பின் மூலம் விட்டதும் அத்துப் போகும்
தாங்கியே குருவின் பாதம் பற்றிடப் பித்து போகும்

மனத்தை ஒருமைப்படுத்தி அக வானில் தோன்றும் கதிரை
கணநே ரமாகின் விழி கட்டி ஈன்ற பெரும்

## கவிஞர் ராசீரா

கனலை காற்றால் விசை கூட்டி அனல் பிழம்பை
சினமேற்றிக் கீழ் செல்லச் சீறும் நாகம் விழித்து

இரண்டரை சுற்று உடலைச் சுருட்டிய அரவம் ஏதோ
விருட்டென தாக்கினாற்போல் வீறுகொண்டெழுந்ததங்கே
இருண்ட உள்ளண்டத்துள்ளே எரிந்தது மின்னல் ஜோதி
கருவுக்கு கருவாம் ஆஹா காணந்தப் பரத்தின் ஆட்டம்

மெல்லிய மின்னல் கீற்றாய் மெய்யினுள் மேவும் சக்தி
சொல்லிடப் போமோ தாயின் சூக்கும ஆற்றல் சக்தி
செல்லுமே மேலே நோக்கிச் சீரிய சீற்றம் சக்தி
கொல்லுமே வினைகள் யாவும் குண்டலினி சக்தி தானே

தூலநம் உடலைச் சுற்றிச் சூடிடும் நரம்புக் கூட்டம்
சீலமாய் அதனை ஏற்றும் சூக்கும உடலின் ஆட்டம்
கோலமாய்ச் சுழியும் கோடும் கூடிடும் நாடி நாட்டம்
சாலவே சிறந்ததன்றோ சாம்பனின் சக்ர ஓட்டம்

ஆட்டமாம் ஆட்டம் இதுபோல் யாரெங்கே கண்டதுண்டு?
ஆட்டுவிப் பவனே ஆட ஆட்டமே எங்கும் எல்லாம்
ஆட்டமே போடும் அணுவும் ஒன்றினோடொன்றின்னுள்ளே
ஆட்டத்தின் விசையால் அங்கே அணுக்களும் கனலாய்மாறி

ஆட்டமே கங்குப் பிழம்பாய் மாறியே நாடிக்குள்ளும்
ஆட்டமே ஆடிப்பாய்ந்து மின்னலைச் சூக்குமத்துள்
ஊட்டியே துரிதமாக உடலையே தூக்கிப்போடும்
ஆட்டத்தின் பயனாய் ஆறு பூக்களும் மலர்ந்தவன்றோ !

# ராஜ ராஜேஸ்வரி

இராகம்: பைரவி
தாளம்: ஆதி

**பல்லவி**

ராஜ ராஜேஸ்வரி - அம்பா
ஸௌந்தர்ய ஸௌமாங்கல்ய ரக்ஷிதே ஸ்திதே

**அனுபல்லவி**

ராஜ புத்ரி
கிரி ராஜ புத்ரி
ஹிமகிரி ராஜ புத்ரி
ஹரித்ரா குங்கும நிவாஸினி
குங்கும நிவாஸினி
(சு)(நி)வாஸினி

**சரணம்**

சர்வமங்கள க்ஷேத்ரவாசினி
பர்வதராஜ புத்ரிமோஹினி
கர்வராக்ஷஸ த்வம்சதாரினி



## சத்தியம் செய்வாய் சர்வேசா!

இராகம்: செஞ்சுருட்டி
தாளம்: ஆதி

**பல்லவி**
சத்தியம் செய்வாய் சர்வேசா - எம்மை
சகலபிணியில்நின்று தாங்கிடுவாயென்று
**சரணம்**
சித்திர லோகத்தில் சிறப்புடன் வாழ்ந்திட
சிந்திக்கும் நல்ல மனம் தாராய்
எத்தனை துன்பங்கள் இன்பங்கள் வந்தாலும்
ஏற்றிடும் அன்புக் குணம் தாராய்
இதந்தரு சுற்றமும் நலந்தரு நட்பும்
பயன் தருபொருளும் உடன் தாராய்
சுவைமிகு கலைகளும் வினையறு வழிகளும்
அமுதிழை தமிழிசை நீ தாராய்
யாவும் ஆண்டு எமதந்திவேளையில்
சிவ சிவ சிவ சிவ நா நல்க (சத்தியம் செய்வாய்......இவை)
யாவும் ஆண்டு எமதந்திவேளையில்
நமசிவாயவென நா நல்க (சத்தியம் செய்வாய்)

தள்ளிநீ வைப்பாயோ? - உடன்
தாங்கிட வருவாயோ?
எள்ளிந கைபுரிவார் - என்னை
ஏற்க வருவாயோ?
கள்ளிக்க ரும்பாலைக் - கொள்ள
காதல் வருகுதய்யா!
அள்ளிய ணைத்திடுவாய் - என்னை
ஆள வருவாயோ?



## சொல்லித்தர மாட்டாயா?

ராகம்: பெஹாக்
தாளம்: ஆதி

**பல்லவி**
சொல்லித் தர மாட்டாயா - சிவங்கரி
**அனுபல்லவி**
கல்லினில் ஈரமும் கனலிடை மென்மையும்
காட்சியெல்லாமுணர்த்தும் இருஅரு ஞானத்தைச்
(சொல்லி)
**சரணம்**
சம்பந்தன் அழுததும் சண்முகன் தாயே நீ
சதுர்வேத ஞானத்தைப் பாலுடன் ஈந்தாய்
அம்மா அம்மா அம்மா அம்மாவெண்றே நாங்கள்
அழுதழைப்பதைக்கேட்டு அரும்பெரும் ஞானத்தைச்
(சொல்லி)

## தத்தித் தத்தி ஆடி

இராகம்: பெஹாக்

தாளம்: ஆதி

**பல்லவி**

தத்தித் தத்தி ஆடி நின்றான் - கண்ணன்

**அனுபல்லவி**

கத்தி ஜதிகள் செய்தே காற்றில் நின்றாடியே
தத்திட தீன் தீன் தீன் தாதரி தானென்றே

**சரணம்**

கட்டிய சலங்கைகள் கால்களில் கெஞ்சிட
சட்டென தடைகளை தாண்டியே நின்றான்
காளிங்கன் தலைகளை கால்களினாலெண்ணி
தாளங்கள் தட்டாதே தரிகிட தானென்றே



# உனை அன்றி வேறொன்றுண்டோ?

இராகம்: ஷண்முகப்ரியா
தாளம்: ஆதி

**பல்லவி**
உனை அன்றி வேறொன்றுண்டோ - வேலே
உனை அன்றி வேறொன்றுண்டோ - என்
வினைதீர்த்து அருள் சேர்த்து உயிரோடு உறவாட
**அனுபல்லவி**
சினம் கொண்டு மதம்கொண்டிங்கிதமின்றி வதம் செய்த
சூரனை எதிர்கொண்டு ஜயம் கண்டு ஆட்கொண்ட
**சரணம்**
தனமும் நல்மனமும் இக்கணம் நல்கும் குணம் கொண்ட
மலையோனாம் சேயோனின் கரம் நிற்கும் வடிவேலே

---

Optional additional to Charanam
கெட்டியாக உனை கட்டி கொண்டு விட்டேன் அருளிடு
வடிவேலே
என்றன் மாயைதனை வெட்டி வீழ்த்திவிட்டு
ஆட்கொள்ள நீ ஓடிவா
மயிலேறி நீ ஓடிவா கொடிஉடன் நீ சீறிவா
அருளிடு வடிவேலா ஆட்கொள்ள நீ ஓடிவா





## உனக்கிது போதாதா?

இராகம்: சஹானா
தாளம்: ஆதி

பல்லவி
உனக்கிது போதாதா - கந்தைய்யா
அனுபல்லவி
மனங்கவர் மாசறு தமிழ் - பா
மாலை தொடுத்துப் பண்ணுமிசைத்தேன்
சரணம்
பொன்னும் பொருளும் பூத்திடும் மணியும்
கன்னித்தமிழின் பண்ணுக்கிணையோ
தமிழா குமரா அழகா முருகா
தமிழிசைபாடி த் தாளும் பணிந்தேன்



## எமைக் காக்க!

இராகம்: சங்கராபரணம்
தாளம்: ஆதி
**பல்லவி**
எம்மைக் காக்க வா வா  -  வேலா
**அனுபல்லவி**
எம்மை யாண்டிடு மெம்பிறானுன் திருவடி
  என்றென்றும் எம்மேல் படவே மனமுவந்து (எம்மை)
**சரணம்**
சித்தம் கவர்ந்திடும் சிங்காரவேலா
  தேவரைக் காத்திட அதிபதியானாய்
எத்தன் சூரனை எதிர்கண்டு ஆட்கொண்டு
  எங்கள் வினையெல்லாம் அறவே களைந்தெறிந்து
(எம்மை)

# இத்தனை கருணை எம்மேலேனைய்யா?

இராகம்: மோஹனம்
தாளம்: ஆதி

**பல்லவி**
இத்தனை கருணை எம்மேலேனைய்யா?
சித்தங்கவர் சரவணபவகுருகுஹ
**அனுபல்லவி**
எத்தனை பாவங்கள் பாரிலே செய்தனனோ?
அத்தனை வினைகளை நொடிதனில்
பொடிப்பொடியாக்கிய
**சரணம்**
அத்தனை முனிவரும் அருந்தவத்தாலே
சித்தா உன்திருவடி சிறப்புடன் சேர்ந்தனர்
தரணியில் மாந்தரைத் தாக்கிடும் வினைகளைச்
சரவணபவயென்று ஒருமுறை கூறிடக் களைந்திடும்



# ஏன் இன்னும் மௌனமய்யா?

இராகம்: ஷண்முகப்ரியா
தாளம்: ஆதி

பல்லவி
ஏன் இன்னும் மௌனமய்யா முருகய்யா
செந்தில் ஆண்டவா மால்மருகா முருகா
அனுபல்லவி
நான் என் சிந்தையில் உன்னையே கொண்டேன்
கந்தையா என் மேல் தயைபுரியாயோ (ஏன் இன்னும்)
சரணம்
வள்ளியைத் தேடி நீ வேடம் பலப்புரிந்த
கள்ளத்தனமும் ஜாலமும் மறந்ததோ
பக்தர்கள் குரல் கேட்டு ஆட்கொண்ட நாயகா
என் குரல் மறந்ததேனோ ஷண்முகப்ரியனே (ஏன் இன்னும்)



# ஏனோ இத்தனை நேரம்?

இராகம்: ஆனந்தபைரவி
தாளம்: ஆதி

**பல்லவி**

ஏனோ இத்தனை நேரம் - காட்சி தர
ஏனோ இத்தனை நேரம் - மீனாட்சி
ஏனோ இத்தனை நேரம் - காமாட்சி

**அனுபல்லவி**

மீனோ மிளிரும் விழிதானோ மிஞ்சுமருள்தேனோ
என்று மலைப்பேனோ
மீனலோசனி மோனரூபினி மண்ணில் எழுந்தருளி
மாந்தரெமைக்காக்க (ஏனோ இத்தனை நேரம்)

**சரணம்**

பலபல ஜன்மங்கள் பாரில்களைத்த எம்மேல்
சில கணமேனு முன்றன் கடைவிழி காட்டாயோ
போதும் போதுமம்மா உன்வி ளையாட்டு
வந்தேன் வந்தேனென்று வாரி வரம் வழங்கிட (ஏனோ
இத்தனை நேரம் - காமாட்சி - காட்சி தா)



# கட்டியெனைப்போட்டுவிட்டான்

இராகம்: பெஹாக்

தாளம்: ஆதி

**பல்லவி**

கட்டியெனைப்போட்டுவிட்டான் - என்னைக்
கண்ணன் கட்டிப்போட்டுவிட்டான் - மதுரக்
கானக்குழலிசைத்தே - மனத்தைக்
கட்டியவன் போட்டுவிட்டான்

**அனுபல்லவி**

குட்டிவாய் அவன் திறக்க அண்டசராசரத்தை
கும்பிட்டு நான்வியக்க
ஓடிவந்துயென்கண்ணைக் (கட்டியவன்
போட்டுவிட்டான்)

**சரணம்**

கட்டிவெண்ணை நான் கடைந்து கண்ணனுக்குத்
தெரியாமல்
காரிருள் அறையில் மறைத்து வைத்திருந்ததனைச்
சட்டென்று அவன் திருட, சாடி நான் பின் தொடர
தாயென்றும் பாராமல் மாயமாய் உரலுடன்
(கட்டியவன் போட்டுவிட்டான்)





# அம்பா சிவங்கரி

இராகம்: திலங்
தாளம்: ஆதி
**பல்லவி**
அம்பா சிவங்கரி ஜகதீசனிடமுறைவாயே
**சரணம்**
ஐயுங்கிலியுங்சௌவும் பீஜமந்திரத்தில் ஆட்சிகள் புரிந்திடும் தேவி
ஐந்து பூதங்களை கட்டி அருள்செய்யும் அன்னையே
பாலாத்ரி புரந்தரியே (அம்பா)

அம்பே மஹா சண்டி தேவி
- ஜகதம்பே லலிதா திரிபுரசுந்தரி

த்வம்சம் மது கைடபம் த்வாம்
விஷ்ணுமயேதி உத்கீலம் ப்ரம்ம பூஜ்யம்
துஷ்டம் மஹாசைன்ய நாசம் - மஹி
ஷாசூர மர்த்யம் சுலோகைக ரக்ஷம்

கேஷாகர்ஷன நிமிக்தம் தூம்ர லோசனா
நாஷம் பஜே காலி ரூபம்
துஷ்டௌ சண்டா முண்டா கோரௌவ் - ஹம்கரேன
தௌ பஸ்மாக்ரித்யே சாமுண்டே

மாயாதி மாரக்த பீஜன் - சப்தா
மாத்ரு சஹ தம்பாக்ஸ்க்யே ஜகதம்பே
சும்ப நிசும்பாதி சூரௌ - சண்டிகே
தௌ சம்ஹாரே த்வம் சாந்தி ஸவரூபே!

சித்தம் பூர்ணாநந்த ரூபம் - பிந்து
மத்யே ச்திதே ஆசனம் பஞ்ச ப்ரஹ்ம ம்
சிந்தாமணி ஸ்ரீனிவாசம்- ஆத்மா
குஹ்யே ஸ்திதம் ஆதி சக்தி ப்ரகாசம்
வித்யாம் ப்ரம்ஹஸ்வரூபினீம் பகவதி
ஐம்பீஜ மந்த்ர ஸ்திதம்

கவிஞர் ராசீரா

லக்ஷ்மீம் த்வம் சுபமங்கள மஞ்சரீ
ஹ்ரீம்கார நாத த்வனீம்
காலீம் க்லீம்ஷவ வாஹன பயங்கரீம்
சிந்தாமணி சுக்ரஹம்
தேவீம் துஷ்ட விநாசினீம் சாமுண்டாயை
விச்சே நமஸ்தாம்பிகே

பத்ரகாளி பிந்துநிலையம் சந்த்ரார்க்னிர் ரூபம்பரம்
அட்டட்டகாச ஹஸிதம் த்வம் மாகாகாளி
நமோஸ்துதே

விஷ்ணுமயே விசாலகூஷி வித்யாசலா நிவாஸினி
இஷ்ட சௌபாக்ய தேஹித்வம் மாஹாலக்ஷ்மி
நமோஸ்துதே

சதுர்முகி சந்த்ரவதனாம் விதாத்ரு வரஷோபிதம்
சிந்தபூர்ண ஸ்வரூபம் த்வம் மஹாவாணி
நமோஸ்துதே!



# தொண்டை கட்டிப் போச்சுதே

இராகம் : பெஹாக்

தாளம் : ஆதி

**பல்லவி**

தொண்டை கட்டி போச்சுதே - கண்ணா
தொண்டை கட்டி போச்சுதே - உன்றன்
சுந்தரரூபப் புகழதைப் பாடியே

**அனுபல்லவி**

கண்ட நாள் முதலாய் காதல்கொண்டாடியே
கண்ணிமைக்காமலே கலந்துரையாடியே

**சரணம்**

சண்டை நீ போட்டாலும் சமரசம் செய்திடும்
கண்மணி நானும் காத்திருக்கின்றேன்
கண்ட இடமெல்லாம் கண்ணா நின் தோற்றமே
வெண்ணையாய்ப் பனியை எண்ணி நான்
தேடியே



## துள்ளித்துள்ளி ஓடுகிறான்

இராகம்: பெஹாக்

தாளம்: ஆதி

**பல்லவி**

துள்ளித்துள்ளி ஓடுகிறான் - கண்ணன்

**அனுபல்லவி**

கள்ளத்தனங்கள் செய்து காலிடுக்கில் நுழைந்து
கண்ணடித்தே காதில் கேளிக்கைகள் செய்து

**சரணம்**

கண்கட்டுக் கலைகளில் தேர்ச்சிகொண்ட கண்ணன்
அன்னையின் சொல்கேட்டுக் கட்டுடனிருக்க
எங்கிருந்தோ குழலின் நாதத்தைக் கேட்டவுடன்
கட்டறுத்து விட்ட கன்றது வென்னவே!



